# இயலிசை

தனி பிரதி விலை 50 காசுகள்
ஆண்டு சந்தா ரூ. 10/-
அரையாண்டு சந்தா ரூ. 5/-

சிறப்பாசிரியர் :
சிதம்பரம் S. மீனாட்சிசுந்தரம்

துணை ஆசிரியர் :
K. P. இளங்கோவன்

'இயலிசை'
57, தெற்கு சிவன் கோயில் தெரு,
கோடம்பாக்கம், சென்னை-24

மலர் 2 | 1-5-83 இசைக்கலை உலக தமிழ் மாதமிருமுறை | இதழ் 1/2


## கந்தனருட்சங்கம்

## திருப்போரூர் சித்திரைக் கிருத்திகை விழா !

### கிருபானந்தவாரியார் வருகை !

சென்னை அமைந்தகரையிலுள்ள கந்தனருட் சங்கம் தங்கள் இரண்டாவது ஆண்டு சித்திரைக் கிருத்திகைப் பெருவிழாவினை செங்கை மாவட்ட திருப்போரூர் தலத்தில் அருள்மிகு கந்தசாமி திருக்கோவிலில் மே 12, 13 தேதிகளில் சிறப்பாக கொண்டாட உள்ளனர்.



மே 12, பரணியன்று மாலை செங்கல்பட்டு V. ஏழுமலை [illegible] விழா ; [illegible] மன்ற நூல்ரான் திரிவர் திரு. V. பாலசுப்ரமணியம் [illegible] திருக்குறளார் V. முனுசாமி மற்றும் பலர் உரையாற்றுகின்றனர் திருக்கோயில் ஆதீன பரம்பரை தர்மகர்த்தர் ஸ்ரீலஸ்ரீ சிதம்பர சிவஞான சுவாமிகள் ஆசியுரை வழங்குகின்றார். இரவு 9 மணிக்கு திரு. T.K.S. கலைவாணன் குழுவினர் இரவு 10 மணிக்கு சிதம்பரம் S. மீனாட்சி சுந்தரம் குழுவினர் இன்னிசை நிகழ்ச்சிகள் நடைபெறும்.

மறுநாள் கிருத்திகை அன்று காலை திருப்புகழ் சபைகளின் பஜனையும், திருமுருக கிருபானந்தவாரியார் [sic] — திருமுருக விசாக நம்பியவர்கள் பாம்பனடிகள் பாடல் நிகழ்ச்சியும் நடைபெறும். பின்னர் நடைபெறும் கருத்தரங்கத்தில் புலவர்கள் கப்பு பெருமாள் அ. சீனுவாசன் அருள்வேல்ராசர் ஆகியோர் கலந்து கொள்கின்றனர். பகல் 1 மணிக்குத் துவங்கும் தொடர் இசையரங்கத்தில் ஸ்ரீரங்கம் T. R. கலாணன், பால்ராஜ் T. E. விபூஷணம், காஞ்சிபுரம் ஆ. விநாயக முதலியார் T. பவானி அம்மையார் B. J. மாதவன் ஆகியோர் பாடுகின்றனர்,

இரவு 8 மணியளவில் ஈழத்தில் தற்பொழுது நிகழ்ச்சிகள் நடத்திக் கொண்டிருக்கும் திருமுருக கிருபானந்தவாரியார் சுவாமிகள் தமிழகம் வந்து முதன் முதலாக திருப்போரூரில இசைச் சொற்பொழிவு ஆற்ற உள்ளார். விழா ஏற்பாடுகளை சங்கத் தலைவர் திரு T. S. மோகனரங்கம் செய்து வருகின்றார்.

## கல்லங்குறிச்சி கண்ட கலை நிகழ்ச்சிகள்

திருச்சி மாவட்டம் அரியலூர் அடுத்த கல்லங்குறிச்சி அருள்மிகு கலியுக வரதராசபெருமாள் கோவில் பெருந் திருவிழா 21-4-83 முதல் 30-4-83 வரை நடைபெற்றது. தினசரி கலை நிகழ்ச்சிகளை ஏற்பாடு செய்திருந்தனர், இஞ்சிக்குடி E. P. K. சண்முக சுந்தரம், ராமதாஸ சகோதரர்கள். அணைக்குடி A. S. போசுராசன் வேத மூர்த்தி சகோதரர்கள், தம்மம் பட்டி குமாரி P. சந்தானலட்சுமி குழுவினர், வேதாரண்யம் V. ரெங்கசாமி, V. சோமாஸ்கந்தன். பருதியப்பர் கோவில் P.K. சௌந்தரராஜன் இவர்கள் நாதசுர இசை நிகழ்ச்சிகளும், திருவானைக்கோவில் S. கண்ணன் குழுவினர். குடந்தை K பாமா கண்ணன் & K, மஞ்சுளா குழுவினர் சிதம்பரம் S. மீனாட்சி சுந்தரம் குழுவினர், கீரனூர் K. C. குருராமலிங்கம் கு. வான்மதி குழுவினர் இவர்கள் இன்னிசை நிகழ்ச்சிகளும் திருவில்லிபுத்தூர் சீனிவாசரங்காச்சாரியார் அரையர் சேவை, குடந்தை மங்கள கானசபா பொம்மலாட்டம், சென்னை V. விலாசினி பரத நாட்டியம் இவைகளும் திருவிழாவில் நடைபெற்றன. விழா கலை நிகழ்ச்சி ஏற்பாடுகளை ஆதீன பரம்பரை தர்மகர்த்தா கோ. கோவிந்தசாமி படையாட்சி செய்திருந்தார்.

## மதுரை தமிழ் இசைச் சங்க 9-வது ஆண்டு விழா !

### கலை நிகழ்ச்சிகள்

மதுரை ராஜா முத்தையா மன்றத்தில் தமிழ் இசைச்சங்க 9வது ஆண்டு விழா 2-5-83 முதல் 8-5-83 வரை நடைபெற உள்ளது, விழாவினை தமிழிசைக் காவலர் டாக்டர் ராஜா சர் முத்தையா செட்டியார் திருவிளக்கினை ஏற்றி வைக்க அமைச்சர் மாண்புமிகு இராம. வீரப்பன் தொடங்கிவைக்கின்றார், மதுரை காமராசர் பல்கலைக்கழக துணை வேந்தர் J. ராமச்சந்திரன் விழாவிற்கு தலைமை தாங்க மதுரை மாநகராட்சி மேயர் M. பட்டுராசன் விழா மலரினை வெளியிடுகின்றார், திருச்சி சேக்மகபூப் சுபானி, திருமதி காலிசபி மகபூப் குழுவினர் நாதசுர இன்னிசை வழங்குகின்றனர்.

விழாவில் சீர்காழி S. கோவிந்தராசன், மதுரை V. சுவாமிநாதன் இலங்கை K. வாசுகி, மதுரை சிவகுமாரன், கல்லுப்பட்டி R. முத்தையா குழுவினர் இன்னிசையும், மதுரை திருமதி, பத்மாசினி ராமசேகர் திவ்யபிரபந்த இன்னிசையும், காரைக்குடி ராஜேஸ்வரி பத்மநாபன் வீணை இசையும், சமயபுரம் கவி. சோ. கனகசபாபதி ஓதுவார், திருக்கடவூர் சிவப்பிரகாச தேசிகர், திருவானைக்காவல் பொன் பழநியப்ப ஓதுவார், தருமபுரம் P. சுவாமிநாதன் இவர்கள திருமுறை இசையும் குமாரி ரமா சுப்பிரமணியம், குமாரி சுவர்ணமுகி இவர்கள் நாட்டிய நிகழ்ச்சிகளும், சென்னை திருமதி. ஜெயா சீத்தாரம் இசைச்சொற்பொழிவு மதுரை ஸ்ரீ சத்குரு சங்கீத வித்யாலயா குழுவினர் கலை நிகழ்ச்சி இவைகளும் நான்கு நாடகங்களும் நடைபெற உள்ளன,


**MODERN COMMERCIAL INSTITUTE**

**Plot No. 11, Nammalvar Street,**

**TAMBARAM EAST**

*Dear Student !*

*Donot blame us later that we did not warn you at right time!*

*This is the right time for you to learn Typewriting, Shorthand and Accountancy from us.*

உலகத் தொடர் கதை

# ஆடியசி அபிராமி

## 5. சிம்மம் வந்தது !

அபிராமிக்கு வயது பதினெட்டுதான். நடன அரங்கேற்றமாகி இரண்டு வருடங்கள் கூட ஆகவில்லை. எனினும் அதற்குள் தஞ்சை மாவட்டம், முழுவதும் அவளது புகழ் பரவியது அவளது நடனக்கலை நயத்தைக் கண்டு பண்டிதர்களும் பாராட்டினார்கள், பேரெழிலை கண்டு பாமரர்களும் வியந்தனர். சில பெண்களும் அவளது அழகில் மயங்க தன்னை மறந்ததுண்டு. அவளைப் பார்க்கவே கூட்டம் கூடியது இன்னும் ஆட ஆரம்பித்து விட்டால்—ரசிகர்கள் தன்னை மறப்பதில் வியப்பில்லை.

அவளது ஆடலை, அழகைப் பார்க்க பலர் ஏங்கநோக்கார்த்து நிற்கும் பொழுது அவளாகவே புதுக் கோட்டை ராசா மாளிகை முன் கூடத்தில் கூடியுள்ள சிலா எதிரில் ஆட விரும்புவதை அறிந்த நட்டுவனார் குத்தாலம் கணபதி பிள்ளைக்கு அபிராமியின் ஆவலைப் புரிந்து கொள்ள இயலவில்லை எனினும், அபிராமியின் எந்த சொல்லையும் தட்ட அவருக்கு பிடிக்காது. காரணம் அவர்களுக்குள் குரு—மாணவி என்ற உறவுக்கு மேல் வளர்ந்த பாசம் தாத்தா— பேத்தி போன்ற உறவோ முன்னால் நின்றது. தவிர அபிராமி மீது தாய் பங்கஜமும் அவ்வளவு பிடிப்பாக இருக்க மாட்டாள். அவளது மனப்பக்குவத்திற்கும், அபிராமியின் மனப் பக்குவத்திற்கும் நிறைய முரண்பாடு இருந்தது. தாத்தா செல்லம்தான் அபிராமியை கர்வமான பெண்ணாக வளர்த்திருந்தது. கணபதி பிள்ளைக்கும் ஆயிரம் மாணவிகள் இருந்தும் அபிராமி மூலம் அவருக்கு கிடைத்த புகழ் தான் பெரிதாக இருந்தது. அவரது மேதா விலாசம் ஊறிய அபிராமியின் புகழ் மிகவும் காரணமாக இருந்தது.

பங்கஜம் தொழிலை விட்டு விட்டாலும் இருந்து அபிராமியை தாத்தா வசமே ஒப்படைத்து விட்டாள் தவிர அபிராமியும் அம்மாவிடம் அவ்வளவு ஈடுபாடு இல்லாதவளே. புகழ் ஏணியில் ஆர்வமாக இருந்தாள் அதற்கும் மேல் அவளுக்கு ஓர் லட்சியம் இருந்தது. அந்த லட்சியம் தான் இன்று அவளை திடீரென்று ஆட்டிவைக்கின்றது.

"சிம்ம நந்தன ஜதிதானே சொல்கிறேன்" என்று சொல்லி விட்டு தனது நடனக்குழுவினர்களைத் தேடினார் கணபதி அபிராமி தாத்தாவிடம் ஜதி கேட்ட உடனேயே தங்கள் இசைக்கருவிகளுடன் அவர்கள் தயாராக நின்றனர்.

அக்காலத்தில் சின்ன மேளம் என விளங்கிய நடனக்குழுவில் கலைஞர்கள் சுமார் அறுவர் இருப்பவர். ஆடும் பெண்கள் நீங்கலாக ஆசிரியர் இவருக்கு பவுத்திர நட்டுவனார் எனவும், அவருடன் துணையாக தாளம் தட்டவும் ஜதிகள் சொல்லவும் ஒருவர் —பக்க நட்டுவனார் எனவும் பாடல்கள் பாடுபவர் பாக நட்டுவனார் எனவும், மிருதங்கம் வாசிப்பவர் முட்டு நட்டுவனார் எனவும். மற்றும் கிளாரினட் வாசிப்பவர் ஒருவர், அவருக்கு சுருதியாக த்த்தி ஊதுபவர் ஒருவரும் இருப்பார்கள் ஏதோ சிலர் புல்லாங்குழலும் பயன் படுத்தியதாக கேள்வி ஆனால் கிளாரினெட் கருவியே அதிகம் சின்ன மேளத்தில் பயன் படுத்தினர். அப்பொழுது நட்டுவனார்கள் அனைவரும்,கிளாரினெட், த்த்தி கலைஞர்களும் நின்றுதான் வாசிப்பார்கள் வீதிகள் கூடுமிடங்களில் சிறு மேடைகள் அமைத்து நடனம் நடக்கும். மேடையில்லாமல் வீதியிலேயே சுவாமி திருவீதி ஊர்வலத்தில் நடனம் நடைபெறும் சகலகலைஞர்களும் ஒருபுறமாக நின்று நிகழ்ச்சியில் பங்கு பெற்றாலும் நட்டுவனார் மாத்திரம் ஆடும் பெண் அருகில் சென்று அவளது ஆட்டத்திற்கு ஏற்றவாறு இப்புறம் அப்புறம் சென்று ஜதிகள் சொல்லி தாளம் தட்டி பாதி நடனம் ஆடி விடுவார் இதனை இப்பொழுது நினைத்து பார்த்தாலும் வேடிக்கையாக இருக்கின்றது. பின்னர் இவ்வழக்கம் மாறி வேறு குடும்ப பெண்களும் ஆடவந்த பொழுது நல்ல மேடைகளில்— அரங்குகளில் நடன நிகழ்ச்சிகள் நடை பெற்ற பொழுது நட்டுவனார்களும் அமர்ந்து தாளம் தட்ட ஆரம்பித்தனர் இந்த மாற்றத்திற்கு பல நட்டுவனார்களும் காரணம் எனினும்—நாட்டிய கலா கேசரி வழுவூர் இராமையா பிள்ளை மூல காரணம் என்பதனை கலை உலகம் அறியும்.

இதேபோன்று பெரிய மேளத்தில்-நாதசுர இசை நிகழ்ச்சியில் அக்கலைஞர்கள் மேல் சட்டை அணியாது தான் வாசிக்க வேண்டும் என்று வழக்கம் இருந்தது, அதனை மாற்றி அழகான சில்க் சட்டை அணிந்து மைனர் போல் நின்று வாசித்து புரட்சி செய்தவர் மறைந்த நாதசுர மேதை திருவாவடுதுறை T.N. இராசரத்னம் பிள்ளையவர்கள் இவருக்கு நாதசுர இசை உலகம் என்றென்றும் கடமை பட்டுள்ளது.

நட்டுவனார்கள் தயாராக வருவதற்குள் அபிராமியும் தயாராக கூட்டத்தின் நடுவே வந்து நின்றாள். உடை அலங்காரம் ஏற்கனவே வேண்டிய அளவு இருந்ததால் தோழி மங்களத்துக்கு அதிக வேலையில்லை. சிம்ம நந்தன நடனம் ஆட இருப்பதால் அபிராமி பாதங்களில் சிவப்பு சாந்தினை குழைத்து அழகாக பூசிவிட்டாள் சலங்கைகளை கட்டி விட்டாள். அவளது மலர் போன்ற மஞ்சள் நிற பாதங்களில்— சிவப்பு சாந்து சேர்ந்ததும் சுற்றி இருந்தவர்களுக்கு போதை உண்டாயிற்று எனலாம்.

கணபதிபிள்ளை தொண்டையைக் கனைத்து கொண்டதும் அபிராமி ஜல் ஜல் என்று இரண்டு தட்டுகள் தட்டி அவரை வணங்கிக் கொண்டாள் வணங்கியவள் மீண்டும் நடு கூடத்திற்கு வராமல் அவரருகிலேயே நின்றாள்.

தத்தித் தகதித்தா
தத்ததின்னதா
தத்தடிங்கு டிண்டி
குஜெகு தஜெகு
தாகு தணகுதோ
தணகு ஜெணகுதா
தாகத ஜெம்தரி
தகததிங்கிணத்தோம் .

என்ற சிம்மநந்தன தாள ஜதிகளை சிம்மநந்தன தாளத்தைப் போட்டு மூன்று காலங்களில் கணபதிபிள்ளை சொல்ல பக்க நட்டுவனார்கள் தாளம் தட்ட, முட்டு நட்டுவனார் மிருதங்கம் தட்ட, சுற்றியிருந்த கலைஞர்கள் தாளம் போட்டனர்.

அபிராமி ஜதி ஆரம்பித்ததும் கூடத்தின் நடுவிற்கு தாளத்துடன் நடந்துவந்து ஜதிக்கு ஏற்ப பலவகை அடைவுகளை நிருத்த நடனங்களை செய்தாள்.

அவளது பாதத்தில் உள்ள சாந்து பட்டு தரையில் ஓர் உருவம் உருவாகிக்கொண்டிருந்தது, மூன்று காலத்தின் கடைசியில் துரித காலத்தில் நட்டுவனார் ஜதி சொல்லும் பொழுது அபிராமி ஆடுகின்றாளோ பம்பரம் சுழல்கின்றதா என அனைவரும் வியந்து பார்த்த வண்ணம் இருந்தனர் நட்டுவனார் ஜதியை சிம்ம நந்தன தாளத்தை கவனிப்பதா அபிராமி ஆட்டத்தை ரசிப்பதா, என அனைவரும் குழம்பியிருந்ததால் தரையில் உருவாகி இருந்த சிம்மத்தையோ மாளிகை மாடியிலிருந்து இறங்கிவந்த சிம்மத்தையோ யாரும் கவனிக்கவில்லை. ஆனால் அபிராமியின் கண்கள் மட்டும் அந்த மாடி வீட்டு சிம்மத்தை கவனித்தது. அவளது இதழில் ஓர் வெற்றி புன்னகை மலர்ந்தது.

(தொடரும்)

அகிலமெல்லாம் மகிழவைக்க
வி ஜி பி யின் புதிய முயற்சி
வி ஜி பி வீடியோ விஷன்

★ இந்திய நாட்டின் சிறப்புக் கலாச்சாரம் சினிமா, நாடகம், நடனம், இசை, சிற்பக் கலைகள், விளையாட்டுகள், பாலர் சினிமா ஆகியவைகள்.

★ உலகின் சிறந்த நவீன எலக்ட்ரானிக் இயந்திரங்கள் மூலம் பிரசித்தி பெற்ற விஜிபி வீடியோ கேசட்டுகளால், உலகமெங்கும் மகிழ்விக்கப்படுகிறது.

விஜிபி வீடியோ விஷன் ஆஃப் இந்தியா

விஜிபி வீடியோ விஷன்
ஆஃப் இந்தியா,
யூனிட் நெ. 51,
2-எஸ்.டி.எஃப். பில்டிங்,
சாந்தாகுருஸ் எலக்ட்ரானிக்
எக்ஸ்போர்ட்
பிராசெஸிங் ஜோன்,
அந்தேரி ஈஸ்ட்;
பம்பாய்-400096.

வெளிநாட்டு ஏற்றுமதி வியாபார விசாரணைகள் வரவேற்கப்படுகின்றது.

# விழுப்புரம் இலட்சதீப விழா!

## ஏராள கலை நிகழ்ச்சிகள் நடந்தது!



விழுப்புரம் அருள்மிகு ஆஞ்சநேய சுவாமியின் 60-வது ஆண்டு லட்சதீப உற்சவம் 10-4-83 முதல் 20-4-83 வரை சிறப்பாக நடைபெற்றது. வருடப் பிறப்பன்று லட்சதீப விழா இவ்வாண்டு வைர விழா ஆனதால் நிறைய கலை நிகழ்ச்சிகள் ஏற்பாடு செய்திருந்தார் திருக்கோவிலின்பரம்பரை அறங்காவலர் திரு. V. கனகசபை அவர்கள்.

A.K.C. நடராசன் குழுவினர் கிளாரினட், நாகை சண்முகம் பழநி சகோதரர்கள் நாதசுரம் P.G. கதிர்வேலு குழுவினர் நாதசுரம் கச்சேரிகள் நடந்தன தூல மங்கலம்சகோதரிகள் சிதம்பரம் S,மீனாட்சி, சுந்தரம், B J மாதவன் சிதம்பரம் நாகராசன் இவர்கள் கச்சேரிகளும் P, S அழகிரிசாமி C.S.J. காளிதாசு (ராகரஞ்சனி) செயின்ட் லூயிஸ் விழியிழந்தோர் இசைக்குழு இவர்கள் மெல்லிசை நிகழ்ச்சிகளும் மற்றும் பலகலை நிகழ்ச்சிகளும் நடைபெற்றன. தினசரி ஏராள ரசிகர்கள் வந்து விழாவினையும் நிகழ்ச்சிகளையும் சிறப்பித்தனர்.

### தஞ்சை மாவட்ட இசை வேளாளர் சங்கம்

## சீர்காழியாருக்கு பாராட்டு!

இசைமணி சீர்காழி S. கோவிந்தராசன் அவர்கள் பத்மஸ்ரீ பட்டம் பெற்றதைப் பாராட்டி தஞ்சை மாவட்ட இசை வேளாளர் சங்கம்சார்பில் அதன் செயலாளர் நாதசுரக் கலைஞர் திருக்கருகாவூர் T. G, சுப்ரமணியம் அவர்கள் சென்னையில் அவரது இல்லத்தில் சீர்காழியாருக்கு சந்தனசவ்வாது மாலைகளை அணிவித்தார். அப்பொழுது அவாதுதுணைவியாரும் இசைக் குழுவினரு சென்னை மாவட்ட இசைவேளாளர் சங்க செயலாளர் சிதம்பரம் S.மீனாட்சி சுந்தரமும் உடன் இருந்தனர் சீர்காழியார் இரு செயலாளர்களுக்கும் தனது நன்றியை தெரிவித்தார்.

## 'திவ்ய பிரபந்தம்' இசைத்தட்டு வெளியீடு

டாக்டர் சேலம் S. ஜெயலட்சுமி பாடிய திவ்ய பிரபந்த L. P. இசைத் தட்டினை 8-4-83 அன்று சென்னை மயிலை பாரதிய வித்ய பவனில் நடைபெற்ற விழாவில் உயர் நீதி மன்ற தலைமை நடுவர் P. R. கோகுலகிருஷ்ணன் தலைமையில் முன்னாள் தமிழக முதல்வர் M. பக்தவச்சலம் வெளியிட்டார். திருமதி. விலாசத்னம் பெற உயர்நீதிமன்ற நடுவர் R. செங்கோட்டுவேலன் பாராட்டுரை வழங்கினார். இசைதட்டினைத் தயாரித்த H. M. V கிராமபோன் கம்பெனி இந்தியா சென்னை கிளை மேலாளர் சதிகோபால் விழாவினை நடத்திய அடையார் கல்சுரல் சென்டர் ஆப் ஆர்ட்ஸ் தலைவர் டாக்டர் S சிவக்குமார் ஆகியோர் நன்றி தெரிவித்து பேசினர்.

## கடிதங்கள்!

மழை வேண்டல் ராகங்கள் கட்டுரைக்கு பாராட்டு! அக்கட்டுரையில் ராகங்கள் 1.வருணப்பிரியா 2.மேகரஞ்சினி 3. அமிர்தவர்சனி என்று வரிசை முறையில் இருந்தால் இன்னும் சிறப்பாக இருக்கும்.

ஓர் இசை மேதை

(திருத்தத்திற்கு நன்றி-ஆசிரியர்)

❋ ❋ ❋

தங்களின் புதியதோர் முயற்சி மேலும் உயர் வடைந்து இசையுலகிற்கு திலக மிட்டது போல் இயலிசை அமைய எமது நல் வாழ்த்துக்கள். கலைஞர்களுக்கு முக்கியம் கொடுத்து கலையைப் பற்றி மட்டுமே செய்திகள் வந்து பல எண்ணற்ற பத்திரிக்கைகளுக்கிடையில் அடக்கமாக முன்னேறிக் கொண்டிருக்கும் தங்களின் இயலிசை எம் போன்றோர்க்கு அத்மார்த்தமான திருப்தியை தருகிறது.

எவ்வளவுதான் திரையிசைப் பாடல்கள் கேட்டுக் கொண்டிருந்தாலும் இடையே தரம் வாய்ந்த சங்கீதத்தைக் கேட்கும் போது மற்ற பாடல்கள் அடிபட்டு போவது போல் பல வண்ண பத்திரிக்கைகளுக்கிடையே தங்களின் தரம் வாய்ந்த பத்திரிக்கை வைரமாய் ஜொலிக்கின்றது, குடத்திலிருக்கும் விளக்காய் இருக்கும் இயலிசை விரைவில் குன்றிலிட்ட விளக்காய் ஒளிவிடும்.

— இசைக்கலைஞர் K. C. குருராம லிங்கம், G. வான்மதி

கீரனூர் -609 40

## பஞ்சபூதத்தல பக்தி பாடல்கள் இசைத்தட்டு

A. V. M. மியூசிக் சர்வீஸ நிறுவனம திருமதி M. கற்பகம் பாடிய பஞ்சபூதத்தல பக்திப் பாடல்கள் இசைத்தட்டு இசைதட்டு இவற்றினை தமிழ் வருட பிறப்பன்று சென்னை சைதாப்பேட்டை அருள்மிகு காரணீஸ்வரர் கோயிலில் வெளியிட்டது. 'இதயம்' பேசுகிறது S. V. S. மணியம் தலைமையில் தமிழக சட்டப்பேரவைத் தலைவர் திரு. க. ராசாராம் வெளியிட சீர்காழி கோவிந்தராசன் பெற்றுகொண்டார் உயர்நீதி நடுவர் T. N சிங்கார வேலு A. V. M. குமரன் நா.ரா முருகவேள் ஆகியோர் வாழ்த்துரை வழங்கினர்.

## நகர சபைகளின் நிகழ்ச்சிகள்

புல்லாங்குழல் கலைஞர் டாக்டர் N. ரமணி அவர்கள் ரமணிஸ் அகடமி ஆப் புளுட் என்று ஒரு புல்லாங்குழல் இசைச்சபை நடத்தி வருகின்றார் இதன் சார்பில் 30-3-83 அன்று சென்னை மேற்கு மாம்பலம் அயோத்யா மண்டபத்தில் K. R. சுப்ரமணியம் குழுவினர் புல்லாங்குழல் கச்சேரி நடைபெற்றது.

நல்ல இசை நிகழ்ச்சிகளையே நடத்தி வரும் நாதோபாசன மயிலை சீனுவாச சாஸ்திரி கூடத்தில தமிழ் வருட பிறப்பு 14-4-83 அன்று M. சந்திரசேகரன் (அவர் மகள்) குமாரி C. பாரதி குழுவின் இருவயலின் கச்சேரி நடத்தியது இச்சபை சார்பில் வரும் 15-5-83 அன்று மாலை மதுரை G. S மணி குழுவினர் இசை நிகழ்ச்சி நடத்துகின்றனர்.

மயிலை ஸ்ரீ தியாகராஜ சங்கீத வித்வத் சமாஜம் ஏப்ரல் 83, மாதத்தில் திருவாளர்கள் S பாலசுப்ரமணியம் M. S. நாராயணன் K. V. கிருஷ்ணன் இவர்கள் கச்சேரிகள் நடை பெற்றன. 2-5-83 அன்று ஸ்ரீமதி ஜானகி ராமானுஜம் குழுவினர் 31-5-83 ஸ்ரீமதி பத்மா ராஜகோபால் குழுவினர் கச்சேரிகள் நடைபெற உள்ளன.

## நாதசுரம் P. S. வீருசாமி பிள்ளை நினைவு விழா!

### மங்கை நல்லூர் சன்மார்க்க சங்கம் நடத்தியது!



தஞ்சை மாவட்ட மங்கை நல்லூரில் உள்ள சமரச சுத்த சன்மார்க்க சங்க 50-வது ஆண்டு பொன் விழா மிகவும் சிறப்பாக 30-3-83 அன்று நடைபெற்றது. காலையில் தமிழகத்தின் பல அருட்பா இசை வாணர்கள் கலந்து அருட்பா பாராயணம் இசை வழங்கினர். மாலையில் மறைந்த நாதசுர மேதை P. S. வீருசாமி பிள்ளையின் 10வது நினைவு விழாவினையும் இவ்விழாவுடன் இணைத்து அவரது திரு. உருவப்பட ஊர்வலம் நடத்தினர். ஊர்வலத்தில் தமிழகபிரபல நாதசுர, தவில் கலைஞர்கள் பலர் கலந்துவாசித்தது காண்பதற்கு அரிய காட்சியாக இருந்தது.

கருத்தரங்கில் புதுவை மாநில அமைச்சர் டாக்டர். சௌரிராசன், நெடுங்காடு P. சண்முகம் MP., திருக்குறளார் முனுசாமி, சரவணபவானந்தர், கவிஞர் முத்தமிழ் முகிலன், தவத்திரு ஊரன் அடிகள் ஆகியோர் கலந்து கொண்டார். 50 ஆண்டுகளாக சங்க செயலாளராகப் பணியாற்றும் V.S.V. பாவாடை பிள்ளைக்கு பாராட்டுத் தெரிவித்தனர்.

இரவு மதுரை S.சோமசுந்தரம் குழுவினர் கச்சேரியும், சென்னை குமாரி சாமுண்டீஸ்வரி குழுவினர் நாட்டியநாடகமும் நடைபெற்றன.

❋ ❋ ❋

TN/MS(S) 260
'IYALLISAI' Musical Bi-Monthly Printed by T. Thirunavukarasu at Jayalakshmi Art Printes. Kavarai Street, Vadapalani, Madras-600 026. Published & Edited by M. Lakshmi. 57, South Sivan Koil Street, KODAMBAKKAM, MADRAS - 600 024.




ந. கி. ராமநாதன்
18, 4வது பிரதான சாலை
இராசா அண்ணாமலைபுரம்
சென்னை - 28

## வெட்டவெளியில் விடியும்வரை பாடினார் டி. எம். எஸ்

### திருப்போரூர் ரசிகர்கள் பரவசம்!

கடந்த 13-4-83 அன்று இரவு திருப்போரூரில் நடைபெற்ற திருப்படித்திரு விழாவில் திரைப்பட பாடகர் திரு. T. M. சௌந்தரராஜன் குழுவினர் இன்னிசை நிகழ்ச்சி மண்டபத்தில் நடைபெற்றது. மண்டபத்தின் உள்ளே அமராமல் ரசிகர்கள் அனைவரும் பார்க்கும் வண்ணம் மண்டபத்தின் வெளியே காற்றோட்டமாக அமர்ந்து தனது தேன் குரலில் தெய்வீக இசை வழங்கினார் T. M. S. அதிகாலை வரை நிகழ்ச்சி நடைபெற்றது. ரசிகர்கள் ஏராளமாக திரண்டிருந்த படி விழாவில் தொழில் அதிபர்கள் S மருதை, R. கோபால, நீதியரசர் T. N. சிங்காரவேலு திருச்சிற்றம்பலம் ஆதீன பரம்பரை தர்மகர்த்தர் ஸ்ரீலஸ்ரீ சிதம்பர சிவஞான சுவாமிகள் ஆகியோர் கலந்து கொண்டனர். விழா ஏற்பாடுகளை ஸ்ரீ அருணகிரிநாதர் அருட்சபை சேத்துப்பட்டு, திருப்போரூர் திருப்படி திருவிழா திருச் சபை சென்னை-21 ஆகிய சபைகள் செய்திருந்தன.

## பாரதீய வித்யா பவன் ஆதரவில் சங்கீதோர்சவம்

### பரதகலாஞ்சலி நடத்தியது!

கடந்த ஏப்ரல் 3 முதல் 7வரை சென்னை மயிலை பாரதீய வித்ய பவன் கூடத்தில் அடையாறு V. P. தனஞ்செயன் தனது பரத கலாஞ்சலியின் 2வது ஆண்டு சங்கீதோற்சவத்தை நடத்தினார். தமிழக ஆளுநர் மேதகு S. L. குரானா உற்சவத்தைத் துவக்கிவைத்தார், விழாவில் நட்டு வாங்கம் திருமதி கமலா ராணி, மிருதங்கம் T. S. நாகப்பன், வீணை கண்ணன் இவர்களைப் பாராட்டினார்கள் குஜராத் நடனம் சமஸ்கிருத. மலையாள நடன நாடகங்கள், அருணாசல கவிராயர் ராமநாடகம் முதலிய நடன நிகழ்ச்சிகளே சங்கீதோற்சவத்தில் இடம் பெற்றன.

## கான திலகம் N. C. சௌந்தரவல்லிக்கு 'பாரதி இசைக்கனல்' பட்டம்!

சென்னை பாரதி இளைஞர் சங்கம், மயிலை தமிழ் நாட்டு நல்வழி நிலையம் என்ற சங்கங்கள் சேர்ந்து சென்னை கலைஞர் கருணாநிதி நகரில் உள்ள அருள்மிகு சக்தி விநாயகர் ஆலயத்தில ஏப்ரல் 83 மாததில 5ம் ஆண்டு பாரதி இசை விழா விளை நடத்தினர். விழாவில் பல இளம் இசைக் கலைஞர்கள் கலந்து பாடினர் உயர்நீதி மன்ற நடுவர் திரு. E. G. மகேசுவரன் திருமதி N. C. சௌந்தரவல்லிக்கு பாரதி இசைக்கனல் 'என்ற பட்டத்தை அளித்தார் இதுவரை இப்பட்டத்தை கடந்த 4 ஆண்டுகளில் சீர்காழி கோவிந்தராசன் செங்கோட்டை கங்காதரன் நீடாமங்கலம் V. V. சுப்ரமணியம். சிதம்பரம் S. ஜெயராமன் ஆகியோர் பெற்றுள்ளனர்.

## நாதசுரம் நாமகிரிப்பேட்டையார் வெளிநாடு பயணம்!

நாதசுரக்கலைஞர் நாமகிரிப் பேட்டை கிருஷ்ணன் அவர்களுக்கு கனடா நாட்டில் உள்ள பாரதி கலைமன்றம் அழைப்புதர இந்திய அரசாங்கமும் கலைஞர்கள் பரிமாற்றத் திட்டப்படி அவரை அனுப்பி வைத்துள்ளது

அவர் கனடாவில் அமெரிக்காவில் உள்ள நியூயார்க், வாஷிங்டன் சிகாகோ, லாஸ் ஏஞ்சல்ஸ் சான்பிரன் சிஸ்கோ முதலிய நகரங்களிலும் நாதசுரக்கச்சேரிகள் செய்கின்றார் அங்குள்ள கால்கேட் பல்கலைக் கழகம். கார்னெல் பல்கலைக்கழகம் இவற்றில் நாதசுரக்கலை பற்றி பேசி பட்டங்கள் பெறுகின்றார்.

அமெரிக்காவில் ஒருமாதமிருந்து திரும்பும் வழியில் இங்கிலாந்து, பிரான்சு, ஜெர்மனி முதலிய நாடுகளிலும் கச்சேரிகள் செய்து ஜூன் 83 மாத கடைசியில இந்தியா திரும்புகின்றார்.

அவரது கலைப்பயணம் சிறப்பாக அமைய எங்கள் வாழ்த்துகள்!

## மாதவன் இசையில் மயங்கிய விஜயவாடா ரசிகர்கள்!

கடந்த பங்குனி உத்திரம் 29-3-83 அன்று ஆந்திர மாநிலம் விஜயவாடா ஸ்ரீபாலசுப்ரமணிய சுவாமி ஆலயத்தில் சென்னையிலிருந்து சென்று திரு B. J மாதவன் இசை விருந்தளித்தார் அவருக்கு விஜயவாடா வானொலி கலைஞர்கள் துணையாக வாசித்தனர் முருக அன்பர்களும், இசையன்பர்களும் மாதவன் குரல் நயத்தையும் திறமையையும் பாராட்டி மூன்று மணிநேரம் திரளாகக் கூடி ரசித்தனர்.

## இசைச் சித்தரின் இசை விருந்து!

### காரைக்குடி ரசிகர்கள் ரசித்தனர்



காரைக்குடி அருள் மிகு கொப்புடை நாயகியம்மன் பூச்சொரிதல் விழா கடந்த சித்திரைப் பௌர்ணமியன்று காரைக்குடி நகரமே விழாக் கோலம் பூண்டு கொண்டாடப்பட்டது. பல இடங்களில் மேடைகள் அமைக்கப்பட்டு கலைநிகழ்ச்சிகள் நடைபெற்ற அதில குறிப்பாக செக்காலை சாலையில் இரவு நடைபெற்றன இசைச் சித்தர் சிதம்பரம் S. ஜெயராமன் குழுவினர் இன்னிசை காரைக்குடி ரசிகர்கள் மிகவும் ரசிக்கும் வண்ணம் அமைந்தது. இசைச்சித்தர் உடல் நிலை சரியில்லாதபோதும் தனது எடுப்பான குரலால் பாடி நிகழ்ச்சியை நல்ல முறையில நிறைவு செய்தார் அவருடன் சிதம்பரம் S. மீனாட்சி சுந்தரம் அவர்களும் பாடினர்.

காரைக்குடி மகரநோம்பு அக்ரகாரத்தில் அன்று மாலை திருமதி M R விஜயா குழுவினர் இன்னிசையும் நடைபெற்றது.

## நாடக மன்ற வளர்ச்சிக்கு இன்னிசை விருந்து!

15-5-83 அன்று மாலை சென்னை தியாகராய நகர் ஸ்ரீ கிருஷ்ண கான சபாவில் இயலிசை ஆதரவாளர் நடிகர் " அப்பா P.S. வெங்கடாசலம், நாடக மன்ற வளர்ச்சி நிதிக்காக திரை இசை இயக்குனர் இசையன்பனின் பல்லவி இசைக்குழுவினர் நிகழ்ச்சி நடத்துகின்றனர் இதற்கு முன்னதாக அப்பா அவர்கள் நடிக்கும் "மழை வரணும் சாமி என்ற நாடகமும் நடை பெற உள்ளது.

## கலைஞர்களின் ராசி பலன்

இநத ராசி பலன் தனி ஜோதிடரை வைத்து புது முறையில கலைஞர்களுக்கென்றே மே-83 மாததிற்கு கணிக்கப்பட்டுள்ளது பலன் சரியாக உள்ளதா என கலைஞர்கள் கடிதம் எழுதினால் நலம்.

மேஷம்—தொழில் விருத்தி
ரிஷபம்—பணவரவு
மிதுனம்—செல்வாக்கு வளர்ச்சி
கடகம்—பிரயாணம்
சிம்மம்—தடைகள்
கன்னி—நல்ல தகவல்
துலாம்—முன்னேற்ற நேரம்
விருச்சிகம்—புகழ்வரும்
தனுசு—வீண் அலைச்சல்
மகரம்—தொழில் தேக்கம்
கும்பம்—எதிர்ப்புகள்
மீனம்—நல்ல வாய்ப்புகள்

பலவித எதிர்பாராத் காரணங்களால் இந்த இதழ் மிகவும்தள்ளிவந்துள்ளது. வாசகர்கள் மன்னிக்கவும்

கலைஞர்களுக்கும் வாசகர் களுக்கும் ரசிகர்களுக்கும் புத்தாண்டு வாழ்த்துக்கள்.

சிறப்பாசிரியர் சிதம்பரம் S. மீனாட்சிசுந்தரம்